6315



**15 | T | I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2015 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2015 டிசெம்பர்
**General Certificate of Education (Ord. Level) Examination, December 2015**

| | |
|---|---|
| ක්‍රිස්තියානි ධර්මය | I, II |
| கிறிஸ்தவம் | I, II |
| Christianity | I, II |

පැය තුනයි
*மூன்று மணித்தியாலம்*
*Three hours*

## கிறிஸ்தவம் I

**கவனிக்க :**

(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான அல்லது மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

1. கருத்துள்ள கிறிஸ்து பிறந்த தினத்தைக் கொண்டாடுவதற்கு, நாம் செய்ய வேண்டியது
(1) திறந்தவெளி நத்தார் கீத வழிபாடு நடத்தல். (2) இல்லங்களில் மாட்டுக்கொட்டில் அமைத்தல்.
(3) நண்பர்களுக்கு வாழ்த்து அட்டைகள் அனுப்புதல். (4) வசதியற்ற பிள்ளைகளை மகிழ்வித்தல்.

2. "இழந்துபோனதைத் தேடி மீட்கவே மானிடமகன் வந்திருக்கிறார்" என்ற இயேசுவின் கூற்றுடன் தொடர்புடையது
(1) செல்வரான தலைவர் பற்றிய நிகழ்வு (2) லேவியின் அழைப்பு
(3) சக்கேயுவின் மனந்திரும்பல் (4) நூற்றுவர் தலைவர் சந்திப்பு

3. திருமுழுக்கு யோவானின் போதனைகளை இக்காலத்தில் ஒரு கிறிஸ்தவன் கடைப்பிடிக்க வேண்டுமென்றால்,
(1) வேறுபாடுகளைக் கைவிட வேண்டும்.
(2) சமுதாய நலனுக்கான மாற்றங்களில் பங்குகொள்ள வேண்டும்.
(3) பணக்குவிப்பிற்கு எதிர்ப்பு தெரிவிக்க வேண்டும்.
(4) மக்கள் தலைவர்களை விமர்சிக்க வேண்டும்.

4. கடவுளின் வல்லமையால் இறையரசு வளர்ச்சியடைகின்றமையை விளக்குவது
(1) புளிப்பு மாவு உவமை (2) அத்திமர உவமை (3) வலை பற்றிய உவமை (4) விதைப்பவர் உவமை

5. பழைய ஏற்பாட்டில் 'துன்புறும் பணியாளர்' என்ற தலைப்பினால் குறிப்பிடப்படுபவர்/கள்
(1) இஸ்ரயேல் மக்கள் (2) எகிப்திய அடிமைகள்
(3) துன்புறும் இறைவாக்கினர் (4) இயேசு கிறிஸ்து

6. தேவையின் மத்தியில் உள்ள பிள்ளைக்கு ஒரு கிறிஸ்தவ மாணவராக நீர் செய்யக்கூடிய உன்னத சேவை
(1) அவரின் தேவைகளை நிறைவுசெய்தல் (2) அவரை நலன்புரி நிலையத்தில் சேர்த்தல்
(3) அவரை அன்புடன் இல்லத்திற்கு அழைத்தல் (4) அவரை நண்பர்களுக்கு அறிமுகம் செய்தல்

7. எலிசபெத்துவின் ஒரு முக்கிய குணாதிசயமாவது
(1) யாவற்றையும் நம்பிக்கையோடு ஏற்றுக்கொள்ளல் (2) தனது கருத்தை உரிய நேரத்தில் தெரிவித்தல்
(3) முதியோர்களின் அறிவுரைகளை மதித்தல் (4) இறை சித்தத்தை ஏற்று ஒன்றும் செய்யாதிருத்தல்

8. கிறிஸ்தவ திருமுழுக்கின் மூலம் நீர் பெற்றுக்கொண்டுள்ள சிறப்பான அனுபவம்
(1) திருச்சபை அங்கத்துவம் (2) முற்றான தூய்மை
(3) மனந்திரும்புதல் (4) தூய ஆவியானவரின் வழிநடத்துதல்

9. கிளிநொச்சி மக்களுக்கு இரக்கம் காட்டி அன்பைச் செலுத்தியவர்
(1) சகோதரி பேக்கர் (2) சகோதரி ஈவ்லின் கார்னி
(3) சகோதரி மியுரியல் ஹட்சின்ஸ் (4) அருட்திரு தம்பிராசா

[பக். 2 ஐப் பார்க்க

10. "உன் கடவுளாகிய ஆண்டவரை வணங்கி, அவர் ஒருவருக்கே பணி செய்வாயாக" என்று இயேசுவானவர் கூறியது,
    (1) உலக ரீதியான செயல்களுக்கு அடிமைப்பட்டவர்களுக்காகும்.
    (2) அற்புதங்களை நாடிச் செல்பவர்களுக்காகும்.
    (3) உண்மையையும் நீதியையும் மறுப்பவர்களுக்காகும்.
    (4) சட்டத்தை உதாசீனப்படுத்துபவர்களுக்காகும்.

11. வாழும் ஆண்டவருக்குக் கிறிஸ்தவன் சான்றுபகர்வது,
    (1) நற்செய்திகளில் காணும் இயேசுவின் உயிர்ப்பை அறிவித்தல் மூலமாகும்.
    (2) மாற்றமடைந்த வாழ்வில் கிறிஸ்தவ விழுமியங்களை வெளிப்படுத்துவதன் மூலமாகும்.
    (3) வானதூதர் பெண்களுக்குக் கூறியவற்றை அறிவிப்பதன் மூலமாகும்.
    (4) உரோம நூற்றுவர் தலைவரின் சான்றைப் பரப்புதல் மூலமாகும்.

12. மன்னித்தல் பற்றிய சில கருத்துகள் கீழே தரப்பட்டுள்ளன.
    A - மன்னிப்பு கோருவதன் முன்னரே மன்னிப்பளித்தல் வேண்டும்.
    B - நிபந்தனையின்றி மன்னிப்பளிக்க வேண்டும்.
    C - சிறு பிழைகளுக்கு மன்னிப்பு கேட்கத் தேவையில்லை.
    D - பிழைகளை பிரசித்தமாகச் சுட்டிக்காட்டி மன்னிப்பு வழங்க வேண்டும்.
    இவற்றில் மன்னிப்பு பற்றிய முக்கிய சிந்தனைகளாவன
    (1) A யும் B யும் (2) A யும் C யும் (3) B யும் C யும் (4) C யும் D யும்

13. இயற்கை அனர்த்தங்களுக்கான முக்கிய காரணம்
    (1) சுயநலம்மிக்க மனித செயற்பாடுகள் (2) இறைவனுக்கு எதிரான செயற்பாடு
    (3) தொழினுட்ப உபகரணங்களைப் பயன்படுத்துதல் (4) தொழிற்சாலைகள் அதிகரிப்பு

14. சவால்களை வெற்றி கொள்வதற்கு ஆதித்திருச்சபையிடமிருந்து இன்றைய திருச்சபை பெறும் வழிகாட்டல்
    (1) பழையவற்றை விட்டு புதிய மார்க்கத்தில் செயல்படுதல் வேண்டும்.
    (2) கிறிஸ்தவர்களுக்கு மட்டும் உதவிசெய்தல் வேண்டும்.
    (3) பொறுப்புகளை அறிந்துகொள்வதற்கு முயற்சித்தல் வேண்டும்.
    (4) தலைமைத்துவ பகிர்தல் மூலம் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணல் வேண்டும்.

15. ஐயாயிரம் பேரைப் போசித்தல் நிகழ்வின் மூலம் நாம் கற்றுக்கொள்ளும் இறையியல் சிந்தனையாவது,
    (1) நாளாந்த தேவைகளுக்கு முதலிடம் கொடுக்க வேண்டும்.
    (2) பொருளாதாரப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு அற்புதங்கள் அவசியமாகின்றன.
    (3) இறை பராமரிப்பில் நம்பிக்கை கொள்ள வேண்டும்.
    (4) முறையான திட்டத்துடன் உணவு பகிர்ந்தளிக்கப்படல் வேண்டும்.

16. இயேசுவின் தோற்றம் மாறுதல் மூலம் சீடர்கள் உணர்ந்து கொண்டது, இயேசுவின்
    (1) துன்புறுத்தல் பற்றி (2) விசாரணை பற்றி (3) அன்பைப் பற்றி (4) இறை சுபாவம் பற்றி

17. கிறிஸ்தவ ஒற்றுமைக்காகப் பணிபுரியும் சவாலை நோக்கும் நாம்,
    (1) சமுதாய பன்மைத் தன்மையை ஏற்றுக்கொள்ளக் கூடாது.
    (2) கிறிஸ்துவின் தலைமைத்துவத்தின் கீழ் ஒரே கூட்டமாக வேண்டும்.
    (3) நமது சொந்த மரபுகளைப் புகழ வேண்டும்.
    (4) பிற சமயத்தவர்களைக் கீழானவர்களாகக் கருத வேண்டும்.

18. பரிசேயரும் வரிதண்டுபவரும் பற்றிய உவமையில், வரிதண்டுபவரிடமிருந்து நாம் கற்றுக்கொள்ளும் குணாதிசயமாவது,
    (1) மனம் வருந்துதலின் மூலம் தம் நிலையைப் புரிந்துகொள்ளுதல் ஆகும்.
    (2) ஒருவர் தம்மை உயர் நிலையில் நிறுத்துதல் ஆகும்.
    (3) ஒருவர் தம்மைப் பிறருடன் ஒப்பிட்டுப் பார்த்தல் ஆகும்.
    (4) ஒருவர் தமது சுய ஆளுமையைக் கட்டியெழுப்ப முயற்சித்தல் ஆகும்.

19. பவுலின் மனந்திரும்புதலின் பின்னர் அவரின் வாழ்வில் காணப்பட்ட உயர் பண்பு
    (1) தம் பிறப்புரிமையை விட்டமை (2) இறை விருப்பின்படி தீர்மானங்களை எடுத்தமை
    (3) யூதரைப் புறக்கணித்தமை (4) பரிசேய சட்டங்களைப் பின்பற்றியமை

20. யூத மெசிய நம்பிக்கையைக் கடந்து சென்ற கிறிஸ்துவைப் பின்பற்றும் நீங்கள்,
    (1) அரசியலை முற்றிலும் விட்டுவிட வேண்டும்.
    (2) மெசிய கோட்பாட்டை வரைவிலக்கணப்படுத்த வேண்டும்.
    (3) முழுமையான விடுதலையை நோக்கிச் செல்ல வேண்டும்.
    (4) விடுதலைப் போராட்டங்களில் விடுதலைக் கோஷங்களை எழுப்ப வேண்டும்.

[பக். 3 ஐப் பார்க்க

21. நீர் வாழும் பகுதியில் வேறு சமய வழிபாட்டுத்தலம் புனரமைக்கப்படும்போது, நீர்
    (1) குருவின் அனுமதியுடன் அதில் கலந்துகொள்ள வேண்டும்.
    (2) இரகசியமாக உதவி செய்ய வேண்டும்.
    (3) உமது கிறிஸ்தவ அடையாளத்தை இழக்காது உதவி செய்ய வேண்டும்.
    (4) இன்னொரு சமய செயல் என்பதால் பங்கு கொள்ளக்கூடாது.

22. பிலாத்து வரலாற்றில் இணைந்தது,
    (1) தனது பதவியைக் காப்பாற்றுவதற்காக உண்மையை மறுத்தவர் என்றாகும்.
    (2) சரியானதைச் செய்வதற்கு தைரியமற்றவர் என்றாகும்.
    (3) மக்களின் குரல்களுக்கு செவிசாய்க்காதவர் என்றாகும்.
    (4) ஏரோது அரசனுக்கு அன்பளிப்புகள் அனுப்பியவர் என்றாகும்.

23. கலப்பையைக் கையில் எடுத்த பின் திரும்பிப் பார்க்காதவர்,
    (1) திடமனதுடன் பணியில் முன்செல்பவர் ஆவார். (2) பிறரின் ஆசீருடன் இறையரசை ஏற்பவர் ஆவார்.
    (3) உலக வாழ்விலிருந்து ஒதுங்குபவர் ஆவார். (4) மனப்பக்குவத்துடன் பணிசெய்பவர் ஆவார்.

24. வழிதப்பிச் சென்ற ஒருவர் உம்மிடம் வந்தால், நீர் செய்ய வேண்டியது
    (1) வழிவிலகியமைக்கான காரணத்தை விசாரித்தல் (2) மனந்திரும்புதலின் முக்கியத்துவத்தை விளக்குதல்
    (3) குருவிடம் அனுப்பிவைத்தல் (4) வரையறையற்ற கடவுளின் அன்புடன் வரவேற்றல்

25. ஏழைகளின் தேவைகளைப் பற்றிச் சிந்திக்காத செல்வந்தரின் பிழைகள் பற்றி இயேசு கூறியது
    (1) செல்வரான தலைவர் பற்றிய உவமையிலாகும். (2) அறிவற்ற செல்வன் பற்றிய உவமையிலாகும்.
    (3) செல்வந்தரும் இலாசரும் பற்றிய உவமையிலாகும். (4) பத்து மினா நாணய உவமையிலாகும்.

26. ஆலய வளவில் நடைபெறும் சில செயல்கள் கீழே தரப்பட்டுள்ளன.
    A - பணம் சேர்ப்பதற்கான களியாட்ட விழா நடத்துதல்
    B - உபவாச செபத்தின் பின்னர் விருந்து ஏற்பாடு செய்தல்
    C - தேவையான வேளைகளில் ஆன்மீக எழுச்சிக் கூட்டங்கள் நடத்துதல்
    D - இறை பணிகளுக்கு தேசிய இசைக் கருவிகளை மீட்டல்
    இவற்றில் ஆலய வளவில் செய்யத் **தகாதவை**
    (1) A யும் B யும் (2) A யும் C யும் (3) B யும் C யும் (4) C யும் D யும்

27. இன்னொருவருக்காகப் பணிசெய்யும் ஒரு சந்தர்ப்பமாவது
    (1) முழு நாளும் தம் சொந்த வயலில் வேலை செய்தல்
    (2) வழியில் விபத்தில் சிக்கிய ஒருவரை வைத்தியசாலையில் அனுமதித்தல்
    (3) ஞாயிறு தினத்தில் நடைபெறும் போட்டியொன்றில் கிராமம் சார்பாகப் பங்குபற்றல்
    (4) வேலைக்குச் செல்வதற்கு முன்னர் தனது பாதுகாப்புக்காகச் செபித்தல்

28. இன்றைய கிறிஸ்தவ பெண்ணின் முக்கிய பங்காக இருக்க வேண்டியது
    (1) கிறிஸ்தவ விழாக்களில் உபசரித்தல் (2) மகளிர் அமைப்புகள் மூலம் பணியாற்றுதல்
    (3) பெண்குருத்துவப் பதவிக்காக விண்ணப்பித்தல் (4) இயன்ற வேளைகளில் கிறிஸ்தவ பணிகளில் ஈடுபடல்

29. பரிசேயர் மற்றும் திருச்சட்ட அறிஞரின் உள்ளார்ந்த வெறுமையைப் பற்றி இயேசு கூறியதை இன்று நாம் காண்பது
    (1) பெற்றோரைக் கவனியாதுவிட்ட பிள்ளைகள், மரித்த பின்னர் நினைவுச்சின்னம் அமைக்கும் போதாகும்.
    (2) சிலரை முதியோர் இல்லங்களுக்கு அனுப்பும் போதாகும்.
    (3) முக்கிய சந்தர்ப்பங்களில் நன்றி வழிபாடுகளில் ஈடுபடும் போதாகும்.
    (4) தொடர்ந்தும் தர்மம் வழங்குதலில் ஈடுபடும் போதாகும்.

30. இயேசுவை மறுதலித்த பேதுருவிற்கு **எதிர்மாறாகச்** செயல்படும் ஒரு கிறிஸ்தவர் செய்ய வேண்டியது
    (1) பிரச்சினைகளின் மத்தியில் பேசாதிருத்தல் (2) பிறரின் கருத்தை கவனியாது இருத்தல்
    (3) தனது செயலை நியாயப்படுத்துதல் (4) தனது பாதுகாப்பை பொருட்படுத்தாமை

31. சவுலின் ஆரம்பகால வாழ்க்கைப் பின்னணி காரணமாக அவரின் பிற்கால திருப்பணிக்குக் கிடைத்த வரப்பிரசாதம்
    (1) பிற இனத்தவரின் திருத்தூதர் ஆனமை
    (2) பிற இன சமுதாயத்தில் பல்வகை கலாசாரங்களுக்கு மத்தியில் வாழ்ந்தமை
    (3) தனக்கென மாத்திரம் கூடாரம் அமைத்தலில் ஈடுபட்டமை
    (4) சிறந்த நற்செய்திப் பணியாளராகச் செயற்பட்டமை

32. இயேசுவில் புதுவாழ்வு காண விரும்பும் வாலிபர்,
    (1) தூய்மையான சன்மார்க்க வாழ்வை மேற்கொள்ள வேண்டும்.
    (2) சமுதாய போட்டி மனப்பான்மையில் கலந்துகொள்ள வேண்டும்.
    (3) எப்பொழுதும் தலைமைத்துவ வகிபாகத்தை ஏற்க வேண்டும்.
    (4) கூடாத நண்பர் சகவாசத்தை விட்டு விலக வேண்டும்.

[பக். 4 ஐப் பார்க்க

33. அன்றைய யூத சமூகத்தில் காணப்பட்டதும் இன்றைய திருச்சபையில் **காணப்படாததுமான** விடயம்
(1) வேதாகமம் இறைவழிகாட்டலினால் எழுதப்பட்டமையை ஏற்றுக்கொள்ளல்
(2) விருந்தோம்பல் செய்தல்
(3) மோசேயின் சட்டத்தை வெளிப்படையாக மட்டும் பின்பற்றுதல்
(4) அடுத்துவரும் பரம்பரைக்கு நிலத்தைப் பகிர்ந்து கொடுத்தல்

34. "முதலில் உங்கள் கண்களில் இருக்கும் மரக்கட்டைகளை எடுத்து எறியுங்கள்." இயேசுவின் இந்த அறிவுரையைக் நாம் கருத்திற் கொள்ள வேண்டியது
(1) ஒருவரைக் குறை கூற நினைக்கும் போதாகும்.
(2) ஒருவரின் நற்குணங்களை மறைக்க நினைக்கும் போதாகும்.
(3) ஒருவரின் திறமைகளைப் பிரபல்யப்படுத்த நினைக்கும் போதாகும்.
(4) ஒருவரைப் புகழ நினைக்கும் போதாகும்.

35. பின்வரும் விடயங்களைக் கவனிக்க.
A - சரியான செயல்முறையைக் கடைப்பிடித்தல்
B - சவால்களின் முன்னால் திடமாயிருத்தல்
C - அற்புதங்களில் மட்டும் தங்கியிருத்தல்
D - அனுபவங்களை முதன்மையாகக் கொண்டு சான்றுபகர்தல்
இவற்றில் திருப்பணிக்கான பவுலின் போதனையின்படி வழிகாட்டலை பெறும் கிறிஸ்தவர் நிறைவுசெய்ய வேண்டியவை
(1) A, B, C (2) A, B, D (3) A, C, D (4) B, C, D

36. கிறிஸ்தவ எதிர்பார்ப்பு தொடர்பான பின்வரும் விடயங்களைக் கவனிக்க.
A - நிலையான வாழ்வைப் பெறுதல்
B - இயேசுவின் இரண்டாம் வருகை
C - பழைய ஏற்பாட்டு வாக்குகளை நிறைவேற்றுதல்
D - மெசிய பணிக்குப் புதிய அழுத்தம் கொடுத்தல்
இவற்றில் கிறிஸ்தவ எதிர்பார்க்கை பற்றிய மிகப் பொருத்தமான விடயங்கள்
(1) A யும் B யும் (2) A யும் C யும் (3) B யும் C யும் (4) C யும் D யும்

37. பின்வரும் விடயங்களைக் கவனிக்க.
A - அனைத்து அடிமைத்தனங்களையும் அகற்றுதல்
B - சூழலை மதிக்கத் தூண்டுதல்
C - இறை, மனித உறவைக் கட்டியெழுப்புதல்
D - பிரிவினைகளைத் தாண்டிச் செல்லும் புதிய சமுதாயத்தை உருவாக்குதல்
இவற்றில் ஒரு பன்மைச் சமுதாயத்தில் சமாதானத்தையும் சகவாழ்வையும் ஏற்படுத்துவதற்கு முக்கியமானவை
(1) A யும் B யும் (2) A யும் C யும் (3) B யும் C யும் (4) C யும் D யும்

38. ஆன்மீக, பொருளாதார குறைபாடுகளை அகற்ற **முடியாமைக்குக்** காரணம்
(1) நலன்புரி பணிகளை முன்னேற்றுவதில் காணப்படும் சிரமங்கள்
(2) பௌதிக பொருட்கள் அழிந்துவிடும் என்று ஏற்றுக்கொள்ளச் செய்வதில் காணப்படும் சிரமங்கள்
(3) வளங்களின் விரயத்தைத் தடுப்பதில் காணப்படும் சிரமங்கள்
(4) நீதியையும் சமத்துவத்தையும் ஏற்படுத்துவதில் காணப்படும் சிரமங்கள்

39. பின்வரும் விடயங்களைக் கவனிக்க.
A - அழகான தேவாலயத்தைப் பாதுகாத்தல்
B - மகிழ்ச்சியுடன் சான்றுபகர்தல்
C - உலகின் இறுதியின் மகிமையில் பங்குகொள்ளும் எதிர்பார்ப்பு
D - இயற்கை அனர்த்தங்களை உலக இறுதியின் அடையாளங்களாகக் கருதுதல்
இவற்றில் இறுதி நாட்களின் எதிர்வுகூறல் ஊடாக இயேசு கவனம் செலுத்திய விடயங்கள்
(1) A யும் B யும் (2) A யும் C யும் (3) B யும் C யும் (4) C யும் D யும்

40. விருந்தோம்பல் அளிப்பது பற்றிய இயேசுவின் அறிவுரை என்ன?
(1) "விருந்திற்கு அழைக்கப்படும்போது கடைசி இடத்தில் அமருங்கள்."
(2) "ஏழைகளையும், உடல் ஊனமுற்றோரையும், கால் ஊனமுற்றோரையும் விருந்திற்கு அழையுங்கள்."
(3) "இறையரசில் விருந்து உண்பவர் ஆசீர்வதிக்கப்பட்டவர்."
(4) "தம்மைத் தாமே தாழ்த்துவோர் உயர்த்தப் பெறுவர்."

* *

[பக். 5 ஐப் பார்க்க

15 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2015 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2015 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2015

ක්‍රිස්තියානි ධර්මය I, II
கிறிஸ்தவம் I, II
Christianity I, II

## கிறிஸ்தவம் II

✳ **முதலாம்** வினாவுக்கும் மேலும் **நான்கு** வினாக்களுக்குமாக மொத்தம் **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

1. (i) சிறப்புமிகு விசேட பிள்ளைப் பேறுகளைப் பற்றி காபிரியேல் தூதரிடமிருந்து நற்செய்திகளைப் பெற்றுக்கொண்ட **இருவரின்** பெயர்களைக் குறிப்பிடுக. அவற்றிற்கு இருவரும் கொடுத்த **மாறுத்தரங்கள்** யாவை?

(ii) "**அறுவடை** மிகுதி, **வேலையாட்களோ** குறைவு. ஆகவே தேவையான வேலையாட்களை அனுப்பும்படி அறுவடையின் உரிமையாளரிடம் மன்றாடுங்கள்."

(a) இவ்வார்த்தைகளை இயேசுவானவர் யாரிடம் கூறினார்?

(b) தடித்த எழுத்துக்களில் தரப்பட்டுள்ள சொற்களை விளக்குக.

(iii) (a) லூக்கா நற்செய்தி நூலின்படி, 'அறிவுக் களஞ்சியத்தின் திறவுகோலை' வைத்திருப்பவர்கள் யார்?

(b) இயேசுவானவர் அவர்களுக்கு எதிராக முன்வைத்த முக்கிய குற்றச்சாட்டு என்ன?

(iv) இயேசுவானவர் தமது திருப்பணியின்போது குழந்தைகளுக்கு நன்மதிப்பை வழங்கி, அவர்களை ஏற்றுக்கொள்ளும் வண்ணமாகச் செயற்பட்ட **இரு** நிகழ்வுகளைக் குறிப்பிடுக.

(v) (a) "இஸ்ரயேலரிடத்திலும் இத்தகைய நம்பிக்கையை நான் கண்டதில்லை என உங்களுக்குச் சொல்கிறேன்." இயேசுவானவர், யாரைப்பற்றி இவ்வசனத்தைக் கூறினார்?

(b) இதிலிருந்து கிறிஸ்தவர்கள் நாம் கற்றுக்கொள்வதென்ன?

(vi) (a) "உங்கள் இடையை வரிந்து கட்டிக்கொள்ளுங்கள், விளக்குகளும் எரிந்து கொண்டிருக்கட்டும்" எனக் கூறியவர் யார்?

(b) இதன் கருத்து என்ன?

(vii) (a) 23வது திருப்பாடலில் (சங்கீதத்தில்) 'ஆயர்' அல்லது 'மேய்ப்பர்' எனக் குறிப்பிடப்படுபவர் யார்?

(b) நல்லாயன், நல்ல மேய்ப்பன் என்ற கோட்பாட்டை இயேசுவானவர் எவ்வாறு நிறைவு செய்தார்?

(viii) "சோதனைக்கு உட்படாதிருக்க இறைவனிடம் வேண்டுங்கள்."

(a) இயேசுவானவர் இவ்வாறு கூறியது எப்போது?

(b) இதிலிருந்து வெளிப்படும் உண்மை என்ன?

(ix) (a) எருசலேம் திருச்சபை மகாநாடு கூடப்பட்டதற்கான காரணம் என்ன?

(b) அதற்குத் தலைமை தாங்கியவர் யார்?

(x) ஒரு கிறிஸ்தவ குடும்பத்தை வெற்றிகரமாக நடாத்துவதற்கான பெற்றோரினதும் பிள்ளைகளினதும் பொறுப்புகள் ஒவ்வொன்று எழுதுக.

(2 × 10 = 20 புள்ளிகள்)

2. (i) 'மெசியா' என்ற வார்த்தையின் கருத்து என்ன? எருசலேம் இறை மாளிகையில் இயேசு பாலகனை மெசியாவாக இனங்கண்டு கொண்டவர் யார்?

(ii) இயேசுவின் பெயரில், அவரின் பெற்றோர் நிறைவேற்றிய **மூன்று** யூத பழக்கவழக்கங்களை சுருக்கமாகக் குறிப்பிடுக.

(iii) இன்று இலங்கையில், கிறிஸ்தவ பழக்கவழக்கங்களும் சமயச் சடங்குகளும் பிறரைக் கவரும் வண்ணம் எவ்வாறு நிறைவேற்றப்படலாம்?

(10 புள்ளிகள்)

[பக். 7 ஐப் பார்க்க

**3.** (i) இயேசுவானவர் தமது திருப்பணியை எந்நகரத்தில் ஆரம்பித்தார்? செபாலயத்தில் எந்த இறைவாக்கு நூலில் இருந்து இயேசுவானவர் தமது திருப்பணி பற்றி வாசித்தார்?

(ii) அவர் அங்கு வாசித்தவற்றை தமது திருப்பணியின்போது எவ்வாறு நிறைவேற்றினார் என்பதனை உதாரணங்களுடன் குறிப்பிடுக.

(iii) மேலே (ii) இல் குறிப்பிடப்பட்டுள்ளவை போன்று இன்றைய சமூகத்தில் காணக்கூடிய அவ்வாறான சந்தர்ப்பங்களைக் குறிப்பிட்டு, அவற்றின் போது கிறிஸ்தவர்கள் எவ்வாறு செயற்படலாமென விளக்குக.

(10 புள்ளிகள்)

**4.** மனித உரிமைகள் மீறப்படுகின்றன என நாம் தொடர்ந்து கேள்வியுறுகிறோம்.

(i) இயேசுவானவரின் கால சமுதாயத்தில் புறக்கணிக்கப்பட்ட குழுக்களில் **இரண்டைப்** பற்றி சுருக்கமாக விளக்குக.

(ii) அவ்வாறு புறக்கணிக்கப்பட்ட குழுவினருக்காக இயேசுவானவர் செயற்பட்டு சமுதாயத்தில் சிறப்பிடம் பெற்றுக்கொடுத்த **மூன்று** சந்தர்ப்பங்களைக் குறிப்பிடுக.

(iii) இலங்கையில் மக்கள் முகங்கொடுக்கும் ஒடுக்கு முறைகள் **ஐந்தைக்** குறிப்பிட்டு, அவ்வாறான சந்தர்ப்பங்களில் கிறிஸ்தவரின் பிரதிச் செயல்கள் எவ்வாறு இருக்க வேண்டுமென விளக்குக.

(10 புள்ளிகள்)

**5.** (i) புனித பவுல் சிறைக்கைதியாகச் சென்ற உரோமைய பிரயாணத்தின்போது முகங்கொடுத்த பிரச்சினைகள் **இரண்டைச்** சுருக்கமாக எழுதுக.

(ii) ஆபத்துகளின் மத்தியில் பவுல் எவ்வாறு சிறந்த தலைமைத்துவத்தை வழங்கினார் என்பதனை விளக்குக.

(iii) ஆபத்துகள், பிரச்சினைகளின் மத்தியில் பவுல் வழங்கிய தலைமைத்துவப் பண்புகளின் அடிப்படையில், இன்று கிறிஸ்தவர்கள் பிரச்சினைகளின் மத்தியில் எவ்வாறு செயற்பட வேண்டுமென விபரிக்க.

(10 புள்ளிகள்)

**6.** (i) இயேசுவானவரின் அழைப்பினைப் பெற்ற சீமோன் பேதுருவும், மத்தேயுவும் அளித்த மாறுத்தரங்கள் எவ்வாறிருந்தன?

(ii) இயேசுவானவர் அன்றைய யூத சமுதாய நிலைப்பாடுகளைத் தாண்டிச் சென்று சீடத்துவத்திற்கு அழைத்தமை பற்றிய **மூன்று** விசேட பண்புகளை முன்வைக்க.

(iii) இன்றைய சமுதாயத்தில் கிறிஸ்துவைப் பின்பற்றுவதற்கென அழைக்கப்பட்ட நம்மிடமிருந்து, இயேசுவானவர் எதிர்பார்ப்பது யாதென விளக்குக.

(10 புள்ளிகள்)

**7.** (i) யூத சமுதாயத்தில் பரிசேயர்களின் நிலை, தராதரம் என்ன? அவர்களின் சமயப் பணிகளுக்கு மத்திய நிலையமாக இருந்த பொது இடம் எது?

(ii) பரிசேயனாகிய சீமோனின் இல்லத்தில் இயேசுவானவர் ஏற்றுக்கொள்ளப்பட்ட வேளையில் கைவிடப்பட்ட **மூன்று** யூத வழக்கங்களை எழுதுக.

(iii) பரிசேயரின் வெறுமையான ஆன்மீகத்தைப் புறக்கணித்து இயேசுவானவர் செயற்பட்ட முன்மாதியைப் பின்பற்றி, சமுதாயத்தில் கிறிஸ்தவர்கள் நாம் செயற்படக் கூடிய **ஐந்து** வழிமுறைகளை விளக்குக.

(10 புள்ளிகள்)

* * *